உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்

# சரியையாதிகளின் சொரூபம்.

சரியையாதிகளாவன - சரியை, கிரியை, யோகம், ஞானம் நான்கு மேயாம், இவைகளின் சொரூபம் என்பது இவைகளின் உண்மை நிலை அல்லது யதார்த்த நிலைமை. இவ்விஷயத்தை யான் இன்று எடுத்துக் கூறப் புகுந்தது ஏனெனின், சைவசித்தாந்தத்தைப் பற்றித் தனதபிப்ராயத்தைத் தெரிவித்த Rev T. Goodwill என்பார் சரியையாதிகளைப் பற்றிப் பின்வருமாறு எழுதியிருக்கக் கண்டபோது எமக்குண்டாகிய மனோவியாகூலமினைத் தெனக் கூறமுடியாது. அவர் எழு தியதாவது "They offer room and shelter to all those shadowy practices both of worship and common life that come before our minds at the mention of the word (idolatry.)" கல்மண்ணாதி விக்கிரகவணக்க மெனக் கேட்ட அட்சணம் நமது மனத்தின் கண் சாமானியரால் வாணாளை நடத்து முறையையும் வழிபாட்டையும் தெரிவிக்கக் கூடிய சில அக்ஞ கர்மங்களையும் தம்முளடக்கிக் கொண்டிருக்கின்றன "என்று எழுதுகின்றார்" "என்ன புண்ணியஞ் செய்தனை யிருங்கடல் வையத்து நந்தம் வலஞ்சுழிவாணனை வாயாரப்பண்ணியா தரித் தருந்தியும், பாடியும் வழிப்படுமதனாலே" என்று எமது ஞான ஸம்பந்தப் பெருமான் திருவாய் மலர்ந்தவித்திருப் பாசுரத்திலுள்ள காம்பிரியத்தையும், இக்கிறிஸ்துவ நண்பர் கொண்ட அபிப்பிராயத்தையும் கண்டுழி என்ன மனோ வேற்றுமையைக் காண்பிக்கின்றது கவனியுங்கள், "லாய்த்தது நந்தமக்கி தோர்பிறவி மதித்திடுமின் - தில்லை யம்பலத்துக் கூத்தனுக் காட்பட்டிருப்பதன்றோ நந்தங் கூழைமையே" என்றும் 'இனித்தமுடைய பொற்பாதமுங்காணப் பெற்றால், மணித்தப்பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே என்றும் 'அன்னம்பாலிக்குந் தில்லைச்சிற்றம்பலம் கண்டின் புற, இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே" என்று பிறவியினாலடையக் கூடிய பெரும் பேறாக எம்பரமாசாரியர்கள் கட்டளை யிட்டிருக்கவும்'கனியினும் கட்டிப் பட்ட கரும்பினும், பனிமலர்க் குழற்பாவை நல்லாரிலும், தனி முடிகவித்தாளுமா சினும், மினியன்றன்னடைந் தார்க்கிடைமருதனே" என்று இனிமையிலும் இனிமை என்றும், பெருமையிலும் பெருமை வாய்ந்ததென்று அடிக்கடி எடுத்திசைத் திருக்கவும், இதைச் சாமானிய மென்று வேறு சிலர் எடுதிசைத்தார். எந்தெந்த மனோநிலைமையினின்று இவர்கள் நோக்கியிருக்க வேண்டுமென்று நான் உங்களுக்குக் கூறவும் வேண்டுமோ கிறிஸ்து நண்பர் இதை 'Shadowy practices" (not illuminative Perception of God.) என்று குருட்டு அல்லது அக்ஞவழிபாடு என்றார், எமது ஆசாரியர்களோ' ஞானவழி பாடு என்றார் - "யாவத்நேநதிரியவைகல்யம் - - யாவந் நாக்ரமதே ஜராதவத் பூஜய சங்கரம்" எவ்வளவுக் கெவ்வளவு நினது இந்திரியாதிகளுள் லோபம் வரவில்லையோ எவ்வளவுக்குள் நரைதிரை மூப்புகள் நினை ஆக்கிரமிக்கவில்லையோ அதற்குள்ளாக இன்பத்திற் குறைவிடமான அண்ணலை அணுகவென்று கண்விழித்த மெய்யறிவோடு செய்ய வேண்டியதென விதித்தார். இவ்வாறு இருவர்களும்

வேறுவேறு நிலைமையினின்றும் ஓர் விஷயத்தை நோக்கினார்கள் என்பது வெளிப்பட்டது. கிறிஸ்தவநண்பர் எவ்வாறு நோக்கினார். தமது ஆசாரியர் எவ்விதமாக இவ்வழிபாட்டை நோக்கினார்கள் என்புழி "கிறிஸ்தவ நன்பர்கள் கல்மண்வழிபாடாகக் கொண்டார். அதனால் அவர்க்கிது ருசிக்கவில்லை (Idolatry) எமது ஆசாரியர்களோ "உரைசேரு மெண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனிபேதநிரைச் சேரப்படைத்தவற்றினுயிர்க் குயிராயங்கங்கே நின்றான் கோயில்" என்றும் "காணுமாரறிய பெருமானாகிப்..... பேருலகம் படைத்தளிக்கும் பெருமான் கோயிறாணுவாய் நின்ற பாதத்துவனை யுத்தமனையிறைஞ் சீரென்று வேணுவார் கொடி விண்ணோர் தமை விளிப்ப போலோங்குமிழலையாமே" என்றும், "அகனமர்ந்தவன் பினராயறு பகை செற்றைம்புலனு மடக்கிஞானம் புகலுடையோர் தம் முள்ளப்புண்டரிகத்துள் ளிருக்கும் புராணர்கோயில்" என்று ஸர்வேச் வரனது வழிபாடாக, காணமுடியாத கடவுளும் கண்காணுமாறு கொண்ட கோலமாகவும், உள்ளத்தில் அன்புததும்பி நிற்கவம் காமமாதி அரிஷட் வர்க்கங்களைக்களைந்து, இந்திரியாதிகளை யடக்கி ஞானங்கைவரப்பெற்ற பரமஞானிகளும் தமதுள்ளத்தில் காணும் பழையரிற் பழை யோனாகிய பெருமான் வழிபாடாகவும் கொண்டார். இவ்வித வேறு வேறு மனோநிலைமைகளே இவ்வேறு வேறு அபிப்பிராயங்கட்குக்காரணம். இன்னும் கூறப்புகின், யாருடையது அக்ஞான நோக்குயாருடையது ஞான நோக்கு எனின் "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமான் புங் கேட்பான் புகிலளவில்லை கிடைக்கவேண்டா கோட்பாலனவும் விளையுங்குறுகாமை யெந்கை, தாட்பால் வணங்கித்தலை நின்றிவை கேட்கத் தக்கார்" என்றும். திருக் கோயில்களிற்காணப்படும் தெய்வத் திருவுருவங்கள் யாவும் ஸர்வேச்வரன் ஆட்பாலவர்க் கருளும் வண்ணத்தையும், அவனுடைய உண்மைச் சொரூபத்தையுங் காட்டவல்லதென்றும், இவைகளை அன்பினாலறியலாமன்றி வேறெதனாலும் அறியமுடியாதென்றும் கூறியதால் "அன்பில்லாமற் பார்த்துழி அவர்களுக்கு உண்மை தோன்றாது, ஸ்ரீமத் அப்பர் சுவாமிகள் "குறிகளும் அடையாளமும் கோயிலும் அவர் நின்றதோர் நேர்மையும் அறிய வாயிரமாரணமோதிலும் பொறியிலீர் மனம் என்கொல்புகாததே " என்றும் கூறியுள்ளர். ஆனது பற்றியே "கன் மனவீர் கழியுங்கருத்தே சொல்லிக்காண்ப தென்னே, நன்மன வாநவீறில்லையம்பலத்து நட்டம், பொன்மலையில் வெள்ளக்குன்றது போலப்பொலிந்திலங்கி, யென்மனமே யொன்றிப் புக்கனன் போந்த சுவடில்லையே' என்றார் இவ்வாறு அன்புடைமனங் கொண்டு உள்ளுணர்வுடன் காணின் "ஊனத்தை நீக்கியுலகறிய வென்னையாட் கொண்டவன்,றேனொத்தெனக் கினியான்றில்லைச் சிற்றம்பலவனெங்கோன், வானத்தவருய்ய வன்ளஞ்சையுண்ட கண்டத்திலங்கு, மேனத்தெயிறுகண்டாற் பின்னைக்கண் கொண்டு காண்பதென்னே", "தில்லைச் சிற்றம்பலவன் றிருவடியைக் கண்டகண் கொண்டு மற்றினிக் காண்பதென்னே" என்று ஞானிகள் விழைந்தபடி வேறு எதுவும் ருசிக்கமோ. இவ்வித நோக்கமன்றி அர்த்தமில்லாத கல்மண்பதுமைகளாக கிறிஸ்துவ நண்பர்கள் கண்டதனையே அவர்கள் கூடித்தேர்ந்தனர்.

நண்பர்காள், கிறிஸ்தவ நண்பர் கூறியது ஆச்சரியமன்று. அவர் வேறு மதஸ்தரா யிருந்தும் சைவசித்தாந்தத்தைத் தம்மதத்தோடொத்துப் பார்த்துச் சிற்சில

விஷயங்களைச் சிலாகித்தனர். ஆனால் நம்முள் அனேகர் வேதம் பிரமாணம் எனக்கொண்டும் தங்களை மகாஞானிகளெனக் கொண்டும் சைவசித்தாந்தத்தைப் பற்றிய பெருநலங்களை யாண்டாயினும் எடுத்துக் கூறியதுண்டோ, இதுவரை ஆங்கிலத்தில் சைவசித்தாந்தத்தை சிலாகித்து எழுதியவர்கள் கிறிஸ்தவப் பாதிரிகளே, இன்னும் அவர்களுக்கு நாம் உண்மையை எடுத்துக் கூறின் ஒத்துக்கொள்வார்கள் என்பதில் ஐயமில்லை. நமது வைதிக மதத்தினரோ வெனின் சைவத்தையும் சிவபெருமானையும் பற்றித் தங்கண் முன்னோர்கள் எழுதிவைத்த தப்புப்பாடத்தைக் கொண்டு துவேஷமே புரிகின்றனர் யாம் சமீபத்தில் உத்தராதி மடஸ்வாமிகளைப் பார்க்க நேர்ந்தது, அப்புண்ணியவானுக்குச் சைவசித்தாந்தம், சைவநூற்கள் இவைகளெனத் தெரியாது, ஆயின் அவர் முன்னோராகிய மத்துவாசாரியர் முதலினோர் சிவநிந்தையையும் சிவசாஸ்திரகிந்தையையும் நாட்டியிருக்கின்றனர் - இவ்வாறே மற்றவர்கள் விஷயத்திலு மென்க இவ்வனைத்திற்கும் காரணம் யாதெனின் சைவர்கள் தங்கள் கடமைகளைச் சரிவர நடாத்தாமையே முன்னோர் சேமித்து வைத்த பொருளைக் கொண்டு என்ன காரியம் பண்ணக் கூடாது, “சிவார் தநம் யஸ்திய ஜெத்பிராணான் - சிவபக்தார்த்த மேவச - சிவாசாரார்த்த மதவா சிவவித்யார்த்த மேவவா - நதேரு ஸ்திருச: கஸசிந் முக்தி மார்கஸ் திதோ நம:

என் கிறிஸ்து நண்பர் கூறியது சரிதானெ நம்மவர் சரியையையுற்றுக் கூறுங்கால்,

"தாதமர்க்கஞ்சாற்றிற் சங்கரன்றன் கோயில்றலமல கிட்டிலகு திருமெழுக்குஞ் சாத்திப், போதுகளும் கொய்து பூந்தார் மாலை கண்ணிபுனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித், தீதிறிருவிளக்கிட்டுத் திருநந்தவனமுஞ் செய்து திருவேடங்கண்டாலடியேன் செய்வ, தியாது பணியீரென்று பணிந்தவர்தம் பணியுமியற்று வதிச் சரினயசெய் வோரீசனுலகிலிருப்பர் ":

இங்ஙனம்
குளித்தலை - அரங்கசாமி ஐயர்.

சித்தாந்தம் - 1915 ஹு - மார்ச்சு மீ